# *நூல் அறிமுகம்*



| | |
|---|---|
| **புத்தகத்தின் பெயர்** | :மூதுரை (இரு மொழிகளில்) |
| **ஆசிரியர்** | : **விசு அய்யர்** |
| **புள்ளி** | : 11 **புள்ளி** (arial) |
| **முதல் பதிப்பு** | : 2025 |
| **கருத்து உரிமை** | : **ஆசிரியருக்கு** |
| **ஒளி அச்சு** | : **மணி பதிப்பகம்** |
| **பக்கம்** | : 36 |
| **விலை** | : INR. 51 |

# மதிப்புரை

இந்த நூலின் மதிப்புரையாக வழங்க வேண்டும் என்றால், நான் இன்னமும் தமிழ் படிக்க வேண்டும் என்றே சொல்ல வேண்டும். எனக்கு தமிழ் தாய் மொழி தான் என்றாலும் நான் பள்ளிகளில் தமிழ் மொழி படித்தது இல்லை.



பள்ளி கல்லூரி நாட்களில் ஹிந்தி மற்றும் மராத்தியே எனக்கு பாட மொழி என்றாலும், தமிழ் மீதுள்ள அன்பின் மிகுதியால், இணைய வழியாகவும், வீட்டில் பாடம் படித்தும் என தமிழ் மொழியை எழுதவும் படிக்கவும் கற்றுக் கொண்டேன். எனினும் உரைநடை தமிழாக இருந்தால் படித்து புரிந்து கொள்ள முடியும். ஆனால் செய்யுள் ஆக இருந்தால், படிக்கிற வேகத்தில் புரியாது.

இது எனக்கு மட்டும் அல்ல; இன்றைய தலைமுறையினர் gen-zக்கு உள்ள சிக்கலும் இதுவாகவே இருக்கும். அவர்களுக்கே ஆர்வம் வந்து அதை படித்து புரிந்து கொண்டு தமிழுக்கு பெருமை சேர்ப்பவர்கள் உண்டா என்றால் கேள்வியாக தான் இருக்கும்.

அது போன்ற சமயத்தில், தொடர்ந்து இந்த வாய்ப்பினை எனக்கு தந்த கொண்டு இருக்கும் இந் நூலாசிரியருக்கு வணக்கத்தையும் நன்றி யையும் பதிவு செய்கிறேன்.

ஔவையார் அருளிய மூதுரை என்ற முத்து முப்பது செய்யுள்களில் உள்ளது. தமிழ் படிக்க தெரியாத தமிழர்கள் மட்டும் அல்ல தமிழே தாய் மொழியாக இல்லாத மற்றவர்களுக்கும் பயன் படும் படி இந்த 30 பாடல்களை transliteration செய்து அதற்கான பொருளை எளிய நடையில் ஆங்கிலத்தில் தனது இருப்பது பாராட்டுக்குரியது.

இத்துடன் இல்லாமல், ஒவ்வொரூ பாடல் பகுதியையும் digital செப்பேடுகளாக தொகுத்து தனது இருபத்தும், ஆடியோ வடிவில் நமக்கு படைத்து தனது இருப்பதும், அதை எளிதாக அணுக, websiteல் பதிவேற்றி இருப்பதும், ஆசிரியரின் இந்த பெரு முயற்சிக்கு ஒரு "சபாஷ்" கொடுக்கலாம்.

பல platformல் கிடைக்கும்படியாகவும், எளிதாக அணுகும்படியாகவும் படித்தால் புரிந்து கொள்வதற்கும், படிக்க தெரியாதவர்களுக்கு ஆங்கிலத்திலும், அதற்கு கூட நேரம் இல்லாதவர்களுக்கு ஆடியோவாகவும், youtube, மற்றும் podcast வழியாக உலகம் முழுவதும் சென்று சேர்வதற்கும் ஆசிரியர் கொடுத்த உழைப்பையும் மக்களிடம் நல்ல கருத்துக்கள் சென்று சேர வேண்டும் என்ற உயரிய நோக்கத்தையும் எடுத்துக் காட்டுக்கிறது.

ஒரு சிந்தனையை எப்படி லாவகமாக கையாள்வது எப்படி அந்த சிந்தனையை நடைமுறைக்கு ஏற்ப எடுத்துச் சொல்வது எப்படி என்பதை தன் கைவசம் வைத்து இருக்கும் வித்தையை தன் வசம் வைத்து இருக்கும், இந்த நூலாசிரியர் அவர்களின் இன்னொரு படைப்பு, இந்த நூல் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

சோதிட சிந்தனையாக, தன்னம்பிக்கை கருத்தாக, ஆய்வு இலக்கியமாக, ஆன்மீக படைப்புகளாக என எப்படி இருந்தாலும், படைப்பு ஆர்வம் குறையாமல், **படிப்பவர்களுக்கு** சலிப்பு ஏற்படாமல், தனது எண்ணங்களை பதிப்பிக்கும் இவர் தம் படைப்புக்கள் நம்மை வியந்து பார்க்க வைக்கிறது.

இந்த புத்தகத்தை அமேசான், விக்கிமீடியா, மற்றும் மின் நூலகத்தில் கிடைக்கும் படி செய்து இருப்பதால் , அன்பர்கள் அவசியம் வாங்கி படித்து பயன் பெற வேண்டும். அதுவே இந்நூல் ஆசிரியருக்கு செய்யும் கைமாறு ஆகும்.

உங்கள்

**மணி அய்யர்.**

maniiiyer73@gmail.com

# என்னுரை

காலம் மாறுகிறது. காட்சிகள் மாறுகிறது. ஆனால் கடமை உணர்வு மாறுகிறதா என்றால் இல்லை என்பதே பதிலாக இருக்கும். இருந்தோம். வாழ்ந்தோம் இறந்தோம் என்று இல்லாமல், அடுத்த தலைமுறையினருக்கு நல்ல சிந்தனைகளை விட்டு செல்வது என்பது எல்லோருக்கும் இருக்கும். எதை செய்வது என்பதில் எப்படி செய்வது என்பதில், பலருக்கு தயக்கமும் சுனக்கமும் இருக்கலாம்.

அந்த சிந்தனையில் தான், ஔவையாரின் மூதுரை, நல்வழி, இவைகளை இரு மொழிகளிலும், ஆத்திச் சூடி, கொன்றை வேந்தன் இவைகளை மும் மொழியிலும் அனைவரும் பயன் படுத்திக் கொள்ளும் விதமாக, ஆடியோ, வீடியோவாகவும், உலகம் முழுவதும் கேட்கும் படியாக podcastலும், websiteலும் கிடைக்கும்படி அமைத்து தனது இருக்கிறோம்.

பாரத பிரதமர் மாண்புமிகு நரேந்திர மோதி ஜி அவர்களின் ஆத்ம நிர்பார் பாரத் திட்டத்தில் ஈர்க்கப்பட்டு உருவான படைப்பு என்பதில் மகிழ்ச்சி.

தமிழ் மற்றும் ஆங்கிலத்தில் இணைத்து செய்த மூதுரை என்ற இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த **மணிபதிப்பகத்தாருக்**கு நன்றியை பதிவு செய்கிறேன்.

எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்குவாழ்த்துரை தந்த அருளாலயம் அமைப்பின் பொருளாளர் **திரு.மணிகண்டன் அய்யர் அவர்களுக்கு** மனம் நெகிழ்ந்த நன்றியையும் பாராட்டுதல்களையும் பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு, மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டும். இந்த நூல் அமேசான், விக்கி மீடியா மற்றும் archieve மின் நூலகம் போன்ற தளங்களில் கிடைக்கும்.

வாங்கி படித்து பயன்பெறவும் மற்றவர்களுடன் பரிசாக பகிர்ந்து கொள்ளவவும் வேண்டுகிறேன்.

பேரன்புடன்

*விசு அய்யர்*
iyervisuiyer@gmail.com

# ஔவையார் அருளிய
# மூதுரை

வாக்குண்டாம் நல்ல மனம் உண்டாம் மாமலராள்
நோக்கு உண்டாம் மேனி நுடங்காது-பூக்கொண்டு
துப்பார் திருமேனித் தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு.

விநாயகப் பெருமாளை வணங்கி துதிப்பவர்களுக்கு வாக்கு திறமையும் நோயற்ற வாழ்வும் கிடைக்கும்.

**Transliteration:**

*Vākkuṇḍām nalla maṉam uṇḍām māmalarāḷ*
*Nōkkuṇḍām mēṉi nuṭaṅkādu – pūkkoṇḍu*
*Tuppār tirumēṉit tumbikkaiyāṉ pādam*
*Tappāmāl sārvār tamakku.*

**Meaning:**

Those who worship and praise Lord Vinayaka — the one with a sacred and shining form, holding flowers — will be blessed with eloquent speech, a pure heart, graceful appearance, and a healthy body free from ailments.

நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந் நன்றி
'என்று தருங்கொல்?' என வேண்டா- நின்று
தளரா வளர் தெங்கு தாள் உண்ட நீரைத்
தலையாலே தான் தருதலால்.

எதையும் எதிர்பார்த்து உதவி செய்யக் கூடாது. பிறர்க்கு
தேவைப்படும் போது உதவ வேண்டும்.

**Transliteration:**

*Nanri oruvarkku seiththakkāl an nanri*
*'Endru tharungol?' ena vēndā – ninru*
*Thaḷarā vaḷar thengu thāl uṇḍa nīrait*
*Thalaiyālē thān tharuthalāl.*

**Meaning:**

When you help someone, don't expect anything in return. Like the coconut tree — it draws water through its roots, but gives it as sweet water through its crown without asking. True help expects nothing back.

நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப் போல் காணுமே- அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம்
நீர் மேல் எழுத்துக்கு நேர்.

உதவி செய்ய வேண்டும் என எல்லோருக்கும் செய்யலாமா?
நல்லவர்களுக்கு செய்தால், நிலைத்து இருக்கும் மற்றவர்காக்குழும்

பயன் தரும். இராக்கம் இல்லாதவர்களுக்கு உதவி செய்தால் அது அடுத்த வினாடியே பயனின்றி போகும்.

**Transliteration:**

*Nallār oruvarkku seitha upakāram*
*Kal mēl ezhuththu pōl kāṇumē – allātha*
*Īramilā nenjaththārkku īnda upakāram*
*Nīr mēl ezhuththukkū nēr.*

**Meaning:**

A good deed done to a noble person lasts like writing on stone.
But if done for the ungrateful, it fades like writing on water.
Help wisely — let your kindness take root where it matters.

இன்னா இளமை வறுமை வந்து எய்தியக் கால்
இன்னா அளவில் இனியவும்- இன்னாத
நாள் அல்லா நாள் பூத்த நன் மலரும் போலுமே
ஆள் இல்லா மங்கைக்கு அழகு.

இளமையில் வறுமையும் முதுமையில் செழிப்பும் இருந்தால் அனுபவிக்க முடியுமா? பருவம் இல்லாத காலத்தில் பூக்கும் பூக்களால் பயன் உண்டா? அப்படி தான் துணை இல்லாத பெண்ணின் அழகும்.

**Transliteration:**

*Innā iḷamai varumai vandhu eithiyak kāl*

*Innā aḷavil iniyavum – innātha*

*Nāḷ allā nāḷ pōotha nanmalarum pōlumē*

*Āḷ illā mangaiyin azhagu.*

**Meaning:**

What's the use of youth with poverty or beauty without company?
Like flowers that bloom in the wrong season,
they remain unseen and unappreciated.

அட்டாலும் பால் சுவையில் குன்றாது அளவளாய்

நட்டாலும் நண்பு அல்லார் நண்பு அல்லர்

கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு

சுட்டாலும் வெண்மை தரும்.

நற்பண்பு உள்ளவர்களிடம் கொண்ட நட்பு வறுமையிலும்,
செழுமையிலும் சிறப்பு தரும்.

**Transliteration:**

*Aṭṭālūm pāl suvaiyil kuṉṟādhu aḷavaḷāy*

*Naṭṭālūm naṇpu allār naṇpu allar*

*Keṭṭālūm mēnmakkaḷ mēnmakkaḷē saṅgu*

*Suṭṭālūm veṇmai tharum.*

**Meaning:**

Milk remains sweet even when it boils — just like noble friendship.
Even if you lose wealth, true friendship remains pure.
Like a conch that shines even after burning,
great people remain noble even through hardships.

அடுத்து முயன்றாலும் ஆகும் நாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா-தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தால் அன்றிப் பழா.

மரங்கள் கிளையும் இலையுமாக இருந்தாலும் பருவத்தில் மட்டுமே பழுக்கும். அது போல தான் நாம் செய்யும் நாற்காரியங்களும்

**Transliteration:**

*Aḍuthu muyandṟālūm āgum nāl aṉṟi*
*Eḍutha karumaṅgaḷ āgā – thoḍutha*
*Uruvaththāl nīṇḍa uyar marangaḷ ellām*
*Paruvaththāl aṉṟip pazhā.*

**Meaning:**

No matter how hard you try, success only comes at the right time.
Even tall trees full of branches don’t bear fruit
unless it’s the right season.
Effort is essential, but timing is everything.

உற்ற இடத்தில் உயிர் வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ?-கல்தூண்
பிளந்து இறுவது அல்லால் பெரும் பாரம் தாங்கின்
தளர்ந்து விளையுமோ தான்.

எதிர்களுக்கு பணியாமல், மானம் குறையுமானல் உயிரையும் விட்டு விடுவார்கள் ஒழுக்க சீலர்கள்

**Transliteration:**

*Urra iṭaththil uyir vaḻaṅgum thanmaiyōr*
*Parralarai kaṇṭāl paṇivarō? – kal thūṇ*
*Piḷandhu iruvathu allāl perum pāram thāṅgin*
*Thaḷarndhu viḷaiyumō thān.*

**Meaning:**

People with inner strength won’t bow to the undeserving.
Like a stone pillar — it may crack under pressure,
but it won’t bend. The virtuous would rather break than lose their dignity.

நீர் அளவே ஆகுமாம் நீர் ஆம்பல்; தான் கற்ற
நூல் அளவே ஆகுமாம் நுண் அறிவு-மேலைத்
தவத்து அளவே ஆகுமாம் தான் பெற்ற செல்வம்
குலத்து அளவே ஆகும் குணம்.

படித்த நூல்களின் அளவே நாம் அறிவு. பேறு, இழவு, செல்வம், பிணி, மூப்பு, சாக்காடு இந்த ஆறும் முன் கருவில் உள்ளவாரே அமையும்.

**Transliteration:**

*Nīr aḷavē āgumām nīr āmpal; thān ka<u>r</u><u>r</u>a*

*Nūl aḷavē āgumām nuṇ a<u>r</u>ivu – mēlai*

*Thavaththu aḷavē āgumām thān pe<u>r</u><u>r</u>a selvam*

*Kulaththu aḷavē āgum guṇam.*

**Meaning:**

A water lily blooms only as deep as the water.
Likewise, wisdom depends on what you learn.
Wealth comes from the depth of one's austerity,
and character is shaped by one's lineage and values.

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலம்மிக்க

நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே-நல்லார்

குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோடு

இணங்கி இருப்பதுவும் நன்று.

நல்லவர்களை - காண்பது, சொல்லைக் கேட்பது, அவர்

தம் குணங்களை சொல்வது, அவரோடு சேர்ந்து இருப்பது நல்லது.

**Transliteration:**

*Nallāraik kāṇpathuvum na<u>n</u><u>r</u>ē; nalam mikka*

*Nallār sol kēṭpathuvum na<u>n</u><u>r</u>ē – nallār*

*Guṇaṅgaḷ uraippathuvum na<u>n</u><u>r</u>ē; avarōdu*

*Iṇaṅgi iruppathuvum na<u>n</u><u>r</u>u.*

**Meaning:**

It’s good to see noble people.
Better to listen to their wise words.
Even better to speak about their virtues.
But best of all is to live among them.

தீயாரைக் காண்பதுவும் தீதே; திரு அற்ற
தீயார் சொல் கேட்பதுவும் தீதே-தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே; அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது.

தீயவர்களை - பார்ப்பது, அவர் தம் பயனற்ற சொல்லை கேட்பது, ஒருவரை பற்றி புறம் பேசுவது இத்துடன் அவர்களுடன் சேர்ந்து இருப்பது கெடுதலையே விளைவிக்கும்.

**Transliteration:**

*Tīyāraik kāṇpathuvum tītē; thiru a<u>rr</u>a*
*Tīyār sol kēṭpathuvum tītē – tīyār*
*Guṇaṅgaḷ uraippathuvum tītē; avarōdu*
*Iṇaṅgi iruppathuvum tīthu.*

**Meaning:**

Just seeing wicked people is harmful.
Listening to their empty words is worse.
Speaking about their bad traits worsens it further.
But living among them brings total ruin.

நெல்லுக்கு இறைத்த நீர் வாய்க்கால் வழி ஓடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்–தொல் உலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை.

நெல்லுக்கு பாய்ச்சும் நீர் புல்லுக்கும் பயனை தருவது போல நல்லவர்களுக்காக பெய்யும் மழையில் பலருக்கும் பயன் உண்டாகும்.

**Transliteration:**

*Nellukku iṟaiththa nīr vāykkāl vaḻi ōḍi*
*Pullukkum āṅgē posiyumām – thol ulagil*
*Nallār oruvar uḷarēl avar poruṭṭu*
*Ellārkkum peyyum maḻai.*

**Meaning:**

The water poured for rice also nourishes the weeds nearby.
Likewise, when a noble soul lives in a community,
everyone around benefits — just like how
rain falls for all because of one good person.

பண்டு முளைப்பது அரிசியே ஆனாலும்
விண்டு உமிபோனால் முளையாதாம்–கொண்ட பேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகாது அளவு இன்றி
ஏற்ற கருமம் செயல்.

தடைகளை தாண்டி தான் வெற்றி இலக்கை அடைய முடியும். அரிசியை உமி காப்பாற்றுவது போல செய்யும் செயலுக்கு பிறர் உதவி இல்லாமல் அது நிறைவேறாது.

**Transliteration:**

*Paṇḍu muḷaippathu ariciyē ān̲ālūm*

*Viṇḍu umipōnāl muḷaiyāthām – koṇḍa pēr̲*

*Ār̲r̲al uḍaiyārkkum ākāthu aḷavu in̲r̲i*

*Ēr̲r̲a karumam seyal.*

**Meaning:**

Even a fertile grain won't sprout
if stored carelessly in husk.
Likewise, even the most capable person
can fail without right timing or support.
Success needs both effort and the right environment.

மடல் பெரிது தழை; மகிழ் இனிது கந்தம்
உடல் சிறியர் என்று இருக்க வேண்டா–கடல் பெரிது
மண்ணீரும் ஆகாது; அதன் அருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும்.

உருவத்தை கண்டு யாரையும் எளிதாக கருதக் கூடாது. கடல் பெரிதாக இருந்தாலும் அருகில் உள்ள ஊற்று நீர் தான் தாகத்தை தணிக்கும்.

**Transliteration:**

*Maṭal perithu ta̲lai; maki̲l inithu kantham*

*Uṭal si̲riyar e̲n̲ru irukka vēṇḍā – kaṭal perithu*

*Maṇṇīrum ākāthu; athan arugē si̲r̲rū̲ral*

*Uṇṇīrum āki viṭum.*

**Meaning :**

Don’t judge someone by their small size.
A tiny spring beside the vast ocean
can quench your thirst — while the ocean cannot.
True value isn't about appearance — it's about essence.

கான மயில் ஆடக் கண்டிருந்த வான் கோழி

தானும் அதுவாகப் பாவித்து–தானும் தன்

பொல்லாச் சிறகை விரித்து ஆடினால் போலுமே

கல்லாதான் கற்ற கவி.

ஆழ்ந்து கல்வி கற்காதவன் கவிதையிலும் கருத்திலும் விஷயம் இருக்காது. கோழி மயில் போல ஆட முடியுமா அது போல தான்.

**Transliteration:**

*Kā̲na mayil āṭak kaṇḍirundha vā̲n kō̲li*

*Tā̲num athuvāgap pāviththu – tā̲num tha̲n*

*Pollāś si̲rakai viriththu āṭināl pōlumē*

*Kallāthā̲n ka̲r̲ra kavi.*

**Meaning :**

A wild turkey saw the peacock dance —
and thought it could do the same!
It spread its rough wings and tried to dance too —
That's like someone untrained pretending to be a poet.
Looks may deceive, but depth reveals the truth.

வேங்கை வரிப்புலி நோய் தீர்த்த விடகாரி
ஆங்கு அதனுக்கு ஆகாரம் ஆனால்போல்–பாங்குஅழியாப்
புல் அறிவாளருக்குச் செய்த உபகாரம்
கல்லின் மேல் இட்ட கலம்.

நன்றி உணர்வு இல்லாதவர்களுக்கு செய்யும் உதவி நமக்கே ஆபத்தாக விளையும். கல்லில் எறிந்த பானை பயன் தராது போல

**Transliteration:**

*Vēṅgai varippuli nōy thīrtha viṭakāri*

*Āṅgu athanukku ākāram ānālpōl – pāṅku a̲liyā*

*Pull ar̲ivāḷarukkuch seytha upakāram*

*Kallin mēl iṭṭa kalam.*

**Meaning :**

Giving help to an ungrateful fool
is like feeding a tiger cured of illness —
dangerous to you later.
Like placing a pot on a rock —
neither safe nor wise.

அடக்கம் உடையார் அறிவிலர் என்று எண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா–மடைத் தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வரும் அளவும்
வாடி இருக்குமாம் கொக்கு.

ஏளனம் செய்யும் போதும், அறிஞர்கள் அடக்கமாக இருப்பார்கள். நல்ல தருணம் வரும் வரை பொறுமையாக காத்திருப்பார்கள். பெரிய மீனுக்காக காத்திருக்கும் கொக்கு போல

**Transliteration:**

*Aṭakkam uṭaiyār aṟivilar eṉṟu eṇṇik*
*Kaṭakkak karuthavum vēṇḍā – maṭai thalaiyil*
*Ōḍum mīn ōḍa uṟu mīn varum aḷavum*
*Vāṭi irukkumām kokku.*

**Meaning :**

Never mistake patience for lack of intelligence.
A stork waits quietly,
until the big fish swims near —
and strikes with precision.
Wise ones remain calm — not because they are weak,
but because they know when to act.

அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவு அல்லர்; –அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறவார் உறவு.

உறவும் நட்பும் நமக்கு துன்பம் வரும் போது நம்மை விட்டு விலகும். துன்பத்திலும் துணை இருப்பதே நல்லுறவு.

**Transliteration:**

*Arra kuḷaththil arunīrp paravaipōl*
*Urruḻith thīrvār uravu allar – akkulaṭṭhil*
*Koṭṭiyum āmpalum neythalum pōlavē*
*Oṭṭi uravār uravu.*

**Meaning :**

Some friendships are like birds in a dried-up pond —
They stay only while there is water.
When trouble comes, they fly away.
True relationships don’t depend on good times —
They stand by you in drought too.

சீரியர் கெட்டாலும் சீரியரே; சீரியர் மற்று
அல்லாதார் கெட்டால் அங்கு என்னாகும்?-சீரிய
பொன்னின் குடம் உடைந்தால் பொன்னாகும்; என் ஆகும்
மண்ணின் குடம் உடைந்தக் கால்?

பண்புடையவர்கள் தாழ்வு நிலையிலும் தன் நிலை மாறாமல் இருப்பார்கள்

**Transliteration:**

*Sīriyar keṭṭālum sīriyarē; sīriyar maṟṟu*

*Allāthār keṭṭāl aṅgu eṉṉākum? – sīriya*

*Poṉṉin kuṭam uṭaintāl poṉṉākum; eṉ ākum*

*Maṇṇin kuṭam uṭaintak kāl?*

**Meaning :**

Noble people stay noble — even in downfall.
If gold breaks, it's still gold.
But if a clay pot breaks…
it turns to dust.
Character lasts beyond circumstances.

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்

நாழி முகவாது நானாழி–தோழி

நிதியும் கணவனும் நேர் படினும் தம்தம்

விதியின் பயனே பயன்.

எத்தனை செல்வமும் வசதியும் இருந்தாலும், நாம் அனுபவிக்கும் அளவு அவ்வளவு தான் (ஆறடி நிலம் , ஒரு சான் வயிறு அவ்வளவு தான்)

**Transliteration:**

*Āḻa amukki mukakkiṉum āḻkaṭal nīr*

*Nāḻi mukavāthu nāṉāḻi – tōḻi*

*Nithiyum kaṇavaṉum nēr paṭinum tamtam*

*Vithiyiṉ payanē payan.*

**Meaning :**

Even the deep ocean gives only a handful of water at once.
No matter how much we own — wealth or partner —
we only get what fate allows.
Contentment comes from acceptance.

உடன் பிறந்தார் சுற்றத்தார் என்று இருக்க வேண்டா
உடன் பிறந்தே கொல்லும் வியாதி–உடன் பிறவா
மாமலையில் உள்ள மருந்தே பிணி தீர்க்கும்
அம் மருந்து போல் வாரும் உண்டு.

நம்மால் பயனில்லை என்றால், உடன் பிறந்தவர்கள் தாமே விலகி விடுவார்கள். உறவுகளை விட நட்புகளே நமக்கு உதவும்.

**Transliteration:**

*Uṭaṉ piṟandār suṟṟattār eṉṟu irukka vēṇḍā*

*Uṭaṉ piṟantē kollum viyāti – uṭaṉ piṟavā*

*Māmalaik kuḷḷa marunthē piṇi thīrkkuṁ*

*Am marunthu pōl vārum uṇṭu.*

**Meaning :**

Just because someone is family, doesn't mean they'll stand by you.
Even disease is "born" with us!
Real help can come from unexpected places —
like rare herbs from far-off mountains.

இல்லாள் அகத்து இருக்க இல்லாதது ஒன்று இல்லை
இல்லாளும் இல்லாளே ஆமாயின்–இல்லாள்
வலி கிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்இல்
புலி கிடந்த தூறாய் விடும்.

புலியின் குகையில் வாழ்வது எவ்வளவு சிரமம் அது போல
அன்பில்லாத மனைவியுடன் வாழ்வது.

**Transliteration:**

*Illāḷ akatthu irukka illāthathu oṉṟu illai*

*Illāḷum illāḷē āmāyiṉ – illāḷ*

*Vali kiṭanda māṟṟam uraikkumēl avil*

*Puli kiṭanda thūrāy viṭum.*

**Meaning :**

A good wife is the source of all goodness in the home.
But if love is missing,
that home becomes a tiger's cave —
beautiful, yet unbearable.

எழுதியவாறே தான் இரங்கும் மட நெஞ்சே!
கருதியவாறு ஆமோ கருமம்?-கருதிப் போய்க்
கற்பகத்தைச் சேர்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்
முற்பவத்தில் செய்த வினை.

விதியின் பயனே விளையும். நினைப்பது நடவாது என்றாலும்
நல்லதே நினைக்க வேண்டும்.

**Transliteration:**

*Ezuthiyavaare thaan irangum mada nenjē!*
*Karuthiyavāru āmo karumam? Karuthip pōy*
*Karpagaththai serthōrkku kānchirangāy īnthathēl*
*Murpavaththil seitha vinai.*

**Meaning :**

Oh innocent heart, fate works exactly as written.
No matter what we hope for, only destined outcomes unfold.
Even if someone reaches the divine "Kalpavriksha" (wish-fulfilling tree),
If fate is harsh, they may still receive a bitter fruit instead of a sweet one.

கற்பிளவோடு ஒப்பர் கயவர்; கடும் சினத்துப்
பொற் பிளவோடு ஒப்பாரும் போல்வாரே–வில்பிடித்து
நீர் கிழிய எய்த வீடுப் போல மாறுமே
சீர் ஒழுகு சான்றோர் சினம்.

குணத்தில் சிறந்தவர், பண்புடையாளரை பிணக்கு காட்டி
பிரியமாட்டார்கள் பிரிந்தாலும் சேர்ந்து விடுவர் .

**Transliteration:**

*Karpilavōdu oppar kayavar; kadum sinaththup*
*Porpilavōdu oppārum pōlvārē; vilpidiththu*
*Nīr kizhiya eytha vīdu pōla mārumē*
*Sīr ozhugu sāṉṟōr sinam.*

**Meaning :**

Fools are like sour fruits, never ripening into sweetness.
But when the wise get angry, their rage is powerful but short-lived—
Like a well-built house that breaks only when the river overflows.
The anger of the wise has a reason, not a habit.

நற்றாமரைக் கயத்தில் நல் அன்னம் சேர்ந்தார் போல்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்–கற்பிலா
மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டில்
காக்கை உகக்கும் பிணம்.

கற்றவர்களோடு கற்றவர்களே விரும்பி சேர்வர். நல் ஒழுக்கம் இல்லாதவர்கள் அவர்களுக்கு என ஒரு வட்டம் அமைத்துக் கொள்வர்.

**Transliteration:**

*Nattrāmarai kayaththil nal annam sērndhār pōl*

*Katrāraik katrārē kāmuṟuvar; karpilā*

*Mūrkkarai mūrkkar mukappar; muthukāṭṭil*

*Kākkai ugakkum piṇam.*

**Meaning :**

Just as beautiful swans gather in clear lotus ponds,
The learned seek the company of the learned.
While the foolish and ill-mannered join together—
Like crows feasting on corpses in a wild forest.

நஞ்சு உடைமை தான் அறிந்து நாகம் கரந்து உறையும்

அஞ்சாப் புறம் கிடக்கும் நீர்ப் பாம்பு–நெஞ்சில்

கரவுடையார் தம்மைக் கரப்பர் கரவார்

கரவிலா நெஞ்சத் தவர்.

நெஞ்சில் குற்றம் உள்ளவர்கள் அதை மறைத்து அந்த குற்றம் வெளிப்படாதவாறு வாழ்வார்கள்.

**Transliteration:**

*Nanju udaimai thaan arinthu naagam karandhu uraiyum*

*Anjaap puram kidakkum neer paambu – nenjil*

*Karavudaiyaar thammaik karappar karavaar*

*Karavila nenjath thavar.*

**Meaning:**

Just as a venomous snake hides quietly in water without revealing its danger, people who hide secrets in their heart will never speak openly. But those with a clear conscience are never deceitful.

மன்னனும் மாசு அறக் கற்றோனும் சீர் தூக்கின்
மன்னனில் கற்றோன் சிறப்பு உடையன்–மன்னர்க்குத்
தன் தேசம் அல்லால் சிறப்பு இல்லை கற்றோர்க்குச்
சென்ற இடம் எல்லாம் சிறப்பு.

கற்றவருக்கு எல்லா சென்ற இடம் எல்லாம் சிறப்பு. மன்னனுக்கு சிறப்பு தன் தேசத்தில் மட்டுமே.

**Transliteration:**

*Mannanum maasu ara kattronum seer thookkin*
*Mannamil kattron sirappu udaiyan – mannarukku*
*Than desam allaal sirappu illai kattorukku*
*Sendra idam ellam sirappu.*

**Meaning:**

A learned person, if compared to a noble king, holds more value. A king's greatness is bound to his kingdom, but a learned person is honoured wherever he goes.

கல்லாத மாந்தர்க்குக் கற்று உணர்ந்தார் சொல் கூற்றம்
அல்லாத மாந்தர்க்கு அறம் கூற்றம்–மெல்லிய
வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம் கூற்றமே
இல்லிற்கு இசைந்து ஒழுகாப் பெண்.

பொருந்தாத எதுவும் பயனை தராது. அது குடும்பத்தில் சேர்ந்து ஒழுகாத மனைவியாக இருந்தாலும்..

**Transliteration:**

*Kallaadha maandharkkukk katru unarnthaar sol koortram*
*Allaadha maandharkku aram koortram – melliya*
*Vaazaikkuth thaan indra kaai koortram koortrame*
*Illirkku isaindhu ozhugaap peṇ.*

**Meaning:**

A fruit that doesn't ripen with the tree becomes waste. In the same way, if a woman doesn't live in harmony with her family, even righteousness turns burdensome. Wisdom and compatibility are essential in relationships.

சந்தன மென் குறடு தான் தேய்ந்த காலத்தும்
கந்தம் குறை படாது; ஆதலால்–தம்தம்
தனம் சிறியர் ஆயினும் தார் வேந்தர் கேட்டால்
மனம் சிறியர் ஆவரோ மற்று?

கொடுத்து சோர்ந்த வள்ளல், குணத்தில் சோர்வதில்லை.
தேய்ந்த சந்தனமாக இருந்தாலும் வாசம் வீசுவது போல

**Transliteration:**

*Sandhana men kuṛaḍu thān theyndha kālaththum*
*Gantham kuṟai padāthu; āthalāl–tham-tham*
*Dhanam siṟiyar āyinum thār vēndhar kēṭṭāl*
*Manam siṟiyar āvarō maṟṟu?*

**Meaning:**

Even if sandalwood is worn down, it never loses its fragrance. Likewise, even if generous people lose their wealth, they don't lose their noble hearts. Great kings may seek help from those with little wealth, but never from those with little character.

மருவு இனிய சுற்றமும் வான் பொருளும் நல்ல
உருவும் உயர் குலமும் எல்லாம்– திரு மடந்தை
ஆம் போது அவளோடும் ஆகும்; அவள் பிரிந்து
போம் போது அவளோடும் போம்.

உறவும் சுற்றமும் எப்போது சேரும்? செல்வமும் அழகும்,
பெருமையும் இருக்கும் போது மட்டும் தான்.

**Transliteration:**

*Maruvu iniya su<u>rr</u>amum vā<u>n</u> poruḷum nalla*

*Uruvum uyar kulamum ellām – thiru maḍandhai*

*Ām pōthu avaḷōḍum āgum; avaḷ pi<u>r</u>indhu*

*Pōm pōthu avaḷōḍum pōm.*

**Meaning :**

Relatives, wealth, beauty, and noble status – they all stay with a man only while Lady Fortune is by his side. Once she leaves, all of them leave with her.

சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம் அவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்–மாந்தர்
குறைக்கும் தனையும் குளிர் நிழலைத் தந்து
மறைக்குமாம் கண்டீர் மரம்.

பண்புடையாளர்கள், தனக்கு தீங்கு செய்தவர்களுக்கும்,
நன்மையையே செய்ய விரும்புவர்.

**Transliteration:**

*Sāndhanaiyum theeyanavē seithidinum thām avarai*

*Āndhanaiyum kāppar a<u>r</u>ivuḍaiyōr–māndhar*

*Ku<u>r</u>aikkum thanaiyum kuḷir ni<u>l</u>alai thandhu*

*Ma<u>r</u>aikkumām kaṇḍīr maram.*

**Meaning :**

Wise people, like trees, protect even those who harm them. Even if a tree is wounded, it offers shade with its cool branches. Similarly, noble souls repay harm with kindness.

# ஆசிரியரின்

## மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.






# அருளாலயம்

## ஒழுக்கம், நெறிமுறைகள்

### திருக்குறள், ஔவையார், சைவ சித்தாந்தம் பயில

- ✅ காகிதமில்லா கற்றல்
- ✅ சுருங்க சொல்லி விளங்க வைக்கும் பாடங்கள்
- ✅ நீண்ட சொற்பொழிவுகள் இல்லை
- ✅ வசதியான நேரத்தில் படிக்கும் வாய்ப்பு
- ✅ ஒலி-ஒளி (Audio-visual) வகுப்பறை
- ✅ வினாடி வினா பயிற்சிகள்
- ✅ 24 x 7 பயன்படுத்த கூடிய digital library
- ✅ வயது, மொழி. Technical knowledge தடையில்லை
- ✅ தனிப்பட்ட உதவி & சந்தேக விளக்கம்



📅 ஒழுக்கத்தின் முதல்படி இங்கே
📲 விவரங்களுக்கு Help deskயை அனுகவும்
📍 இருக்கையை இப்போது பதிவு செய்யுங்கள்!

Inspired by ATMA NIRBHAR BHARAT ABHIGYAN

# ஆசிரியர் குறிப்பு

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார். பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னைசுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

